நெல்லைச் செந்தமிழ் மாலை :



# துகில் விடு தூது

[தமிழ்ச்சுவை நிறைந்ததோர் இன்னிசைப் பனுவல்]



எஸ். முத்தைய பிள்ளை

புஸ்தக வியாபாரம்

திருநெல்வேலி ஜங்ஷன்

1927

ரெஜிஸ்தர் செய்தது]

[விலை 4 அணா

# முகவுரை

தமிழ் இலக்கியப் பரப்பிலே பெருங்காவியங்கள் தவிரச் சிறு காவியங்களும் பலபடியாக அமைந்துள்ளன. அவை தூது, அந்தாதி, கலம்பகம், உலா, மடல், சிந்து, பிள்ளைத்தமிழ், பரணி கோவை முதலியன.

கற்போர் வயதிற்கும் தகுதிக்கும் தக்கபடி இச்சிறுகாவியங்கள் அவர்கட்கு உலக நடையினையும் செந்தமிழ்ச்சுவையினையும் ஊட்டி ஒருங்கே அறிவைப் பெருக்குவன.

இவற்றின் இலக்கணங்கள் எல்லாம் விரிவாகப் பாட்டியல் முதலிய இலக்கண நூல்களில் தெரிந்து கொள்ளலாம்.

இனித் தூது என்ற நூலின் இலக்கணத்தைச் சிறிது ஆராய்வோம். தூது என்றால் 'பாணன் முதலாகப் பாங்கன் ஈறாக விருக்கும் உயர்திணை இருபாலினையும் அன்னமும், கிளியும், வண்டும், மயிலும், குயிலும் முதலாயின அஃறிணைப் பொருளையும் இளைய கலாம் முதிய கலாம் இவற்றின் துனி நீங்கற்கு வாயி

லாக விடுத்தலைக் கலிவெண்பாவாற் கூறுவது. இலக்கண விளக்க நூலுடையாரும் 'பயில்தரும் கலிவெண் பாவி னாலே, உயர்திணைப் பொருளையும் அஃறிணைப் பொருளையும், சந்தியில் விடுத்தல் முந்து தூது தூதெனப், பாட்டியற் புலவர் நாட்டினர் தெளிந்தே' என்று கூறிப்போந்தார். 'இருதிணையை விடல்தூது' என்பது சிதம்பரப்பாட்டியல் இவ்வாறு பாட்டியல் நூல்களில் கூறியிருப்பதால தூதின் இலக்கணம் விளங்குகிறது.

ஆகவே தலைவனிடத்துத் தலைவியும், தலைவியிடத்துத் தலைவனும் தமது வேட்கையை யெல்லாம் தெரிவித்துப் பாணன், பாங்கன், விறலி என்பாரையும் தமது ஆற்றாமை மிகுதியினால் கேள்வியும் பேச்சும் இல்லாதன எனத்தெரிந்தும் அஃறிணைப் பொருளாகிய மயில், குயில், அன்னம், மேகம் என்பவற்றையும் முறையே தலைவி தலைவரது ஊர் பெயர் சொல்லித் தூதாக விடுப்பது என்பது இதனால் பெறப்படுகிறது.

தூது விடுதற்குரிய பொருள்கள் யாவை என்றால்:—

'இயம்புகின்ற காலத் தெகின்மயில் கிள்ளை
பயம்பெறுமே கம்பூவை பாங்கி-நயந்தகுயில்
பேதைநெஞ்சம் தென்றல் பிரமரமீ ரைந்துமே
தூதுரைத்து வாங்கும் தொடர்'

என்று புகழேந்திப்புலவர் கூறிய செய்யுளில் சொல்லப்பட்டவைகள். இது பிற்காலத்து இலக்கணம். சமீபகாலத்தில் இவ்விலக்கணத்தில் சொல்லப்படாத பொருள்களையும் நவீனத்தமிழ்ப்புலவர்கள் தூதனுப்பியிருக்கின்றனர். உதாரணமாக பணத்தையும் பழஞ்சோற்றையும் தூதுவிட்டதைக் கூறலாம்.

அங்ஙனமே நமது ஆசிரியரும் துகிலினைத்தூது விடுகின்றனர். இதில் விசேஷம் என்னவென்றால் இதற்கு முன் புலவர்கள் கூறிய வருணனைகளையே திரும்பத்திரும்பக் கூறாமல் புதியன புதியனவாகத் தமது அறிவையும் கற்பனைத்திறத்தையும் செலுத்திப் புதியதுறைகளில் கவி அமைத்திருப்பதேயாகும்.

இதுவரை எப்புலவரும் துகிலைத் தூதுவிட்டதாகக் கேட்டதில்லை. கதர் ராட்டினம் என்று பெரிதும பாராட்டப்படும் இக்காலத்தில் துகில்விடுதூது நவீன உலகத்திற்குக் காலத்தால் மிகுந்த பொருத்த முடையதேயாகும்.

இனி இந்நூலின் அமைப்பைப்பற்றிச் சிறிது கூறுவோம். இத்தூது முதல் முதலாகத் துகிலின்சிறப்பைப் பலபடப் பாராட்டிப்பேசிப் பாட்டுடைத்தலைவன் பவனிவருகை, பவனிகண்ட மாதர்படும் நிலைமை என்பன முதலாகப் பல உறுப்புக்களைத் தாங்கிக் கடைசியாகப் பாட்டுடைத் தலைவன் பவனியில் அவனைக் காணவந்த மாதர்களில் ஒருத்தி மீது ஒருவன் காதல்கொண்டு கருத்தழிந்து காளி கோட்டத்துச்சென்று கண்ணயர்ந்தானாக அப்பொழுது கண்ட கனவில் அவளோடு இன்புற்றதாக வுணர்ந்து கண்விழித்து 'கனவென்றெழுந்திருந்தே னல்வினை பொன் றில்லேன் கனவுமிழந்திருந்தவாறு' என்று கவன்று, பின் துகிலை அவள் பால் தூது விடுத்தலைக் கூறுவது. இதனை இந் நூலின் 61, 62 கண்ணிகளால் அறியலாம்.

தற்காலத்திலுங்கூடத் திருமணச்சடங்குகளில் மணமக்கள் தம் மணத்தை உறுதிசெய்வதற்குச் செய்யும் சடங்குகட்கு இத் துகிலினையே இன்றியமையாத துணையாகக் கொள்ளுகின்றனர்.

இந் நூலாசிரியர் பெயர் ஊர் முதலாயின சிறிதும் விளங்கவில்லை. இந்நூற் பாட்டுடைத்தலைவனுலாவருணனையில் தசாங்கம் கூறப்பட்டிருப்பதால் பாட்டுடைத்தலைவனைப்பற்றிய குறிப்புக்கள் பல தெரியவருகின்றன.

இப் பாட்டுடைத்தலைவன் பாண்டிநாட்டிலேயுள்ள கல்லக நாட்டுத்தலைவன். இவனது தலைநகர் செண்பகநல்லூர், மலை மாணிக்கமலை, நதி கருப்பாநதி, கொடி அநுமக்கொடி, மாலை முல்லை, இத்தலைவன் சோமசுந்தரக்கடவுளைப் போற்றுகின்ற பரஞ்சோதி முனிவர் திருவடிகளைச் சிந்தைவைப்பவன்.




வீரசக்கரபாணியும் முத்துவீரப்ப ராசேந்திரனும் இப் பாட்டுடைத்தலைவனது மருமக்கள்.

இத் தூதின் ஏட்டுப்பிரதியில் 'துகில்விடு தூது கூடு௮-ளு சுபகிருது௵ கார்த்திகைமீ ௩-உ' என்று எழுதப்பட்டிருக்கிறது. இது பெரும்பாலும் இந் நூலின் காலமாகவே இருக்கலாம். அவ்வாறாயின் இந் நூலின் காலம் இற்றைக்கு 145 ஆண்டுகளுக்கு முன்னாகும்.

இந் நூலில், தமிழ்ச்சுவை மிகவும் ததும்பிக்கிடக்கின்றது. முடுகுகளும் சிலேடை முதலிய சொல்லணி பொருளணிகளும் ஆங்காங்கே காணப்படுகின்றன. இந் நூலாசிரியர் சங்க நூல்களிற் பயிற்சியுடையாரென்பது துகிற்கொடையால் வள்ளலெனப் பெயர்பெற்ற பேகனைக் குறிப்பதனால் விளங்குகின்றது. மற்றுந் துகிலின் சிறப்புக் கூறுமிடத்துத் துரோபதையின் மானத்தைக் கண்ணபிரான் துகிற்கொடையாற் காத்ததைக் கூறுவதும் போற்றத்தக்கது.

இந் நூலினை ஏட்டுச்சுவடியிலிருந்து கையெழுத்துப் பிரதி செய்து அச்சிற்கு உதவின எனது நண்பரும், அரிய தமிழறிஞரும், சென்னைத் தமிழகராதிச் சங்கத்தின் தலைமைப் பதிப்பாளருமான ஸ்ரீமான் S. வையாபுரிப்பிள்ளை B.A. B.L., அவர்கட்கு எனது மனமார்ந்த நன்றி உரிமையாகின்றது.

மற்றும் இந் நூல் சம்பந்தமான ஏட்டுப் பிரதிகளை உதவி விளங்காத பாடங்களையும் மேற்கோள்களையும் தெரிவிக்கும் தமிழ்ப் புலவர்கட்கு எனது நன்றியை வெளியிட்டுத் திருத்திய பாடத்துடனும் அவர்கள் பெயருடனும் மறுபதிப்பு அச்சிடப்படும்.

சிக்கநரசையன் கிராமம்
திருநெல்வேலி
15—11—27

S. முத்தையபிள்ளை,
பதிப்பாளர்.

உ

# துகில் விடு தூது.



## காப்பு.

செகபதியை வெள்ளையரா சேந்திரனை வாழ்த்தித்
துகில்விடு தூதுதன்னைச் சொல்லப்—புகலரிய
மெய்ப்பார தந்திகழு மேருவிற்கோட் டோர்கோட்டுக்
கைப்பார தந்திமுகன் காப்பு.

## நூல்.

பார்பூத்த பேருதரப் பச்சைப் பசுந்துளபத்
தார்பூத்த தாமோ தரனுக்குப்—பேரிடுவோர்
பொன்னாடைப் போலே போற்றியபீ தாம்பரனென்
றந்நாளுந் னாமமிட்டா ரம்பரமே—முன்னாளிற்
தேசிகனென் றோராசைத் தேகசொர்க்கஞ் சேரவிட்ட
கோசிகனுக் குன்பேராங் கோசிகமே—மூசுசிறைப்
பூசல்வண்டு கிண்டிமதுப் பொங்கிவரும் பூமணத்தை
வாசமென்ப துன்பேராம் வாசமே—ராசர்மத
வானைபரி தேர்கடுங்கா லாளுமவர் வாளுமுன்பேர்த்
5 தானையென்று பேர்தரித்த தானையன்றோ—நானிலத்திற்
பெண்பாலு மாண்பாலும் போராடை சுற்றுமென்றே
வெண்பாலு மப்பெயரை மேலாக்கும்—நண்பாலே
ஊடியபா வாணருன்னா லொன்றுகொடுக் கின்மற்றோர்
கோடி கொடுத்ததெனக் கொள்வாரே—நாடறிய

வீதிகொண்டு கான்மடித்து மேனிபடி பட்டா லும்
வாதுவரே ருதபரி வட்டமே—சோதிசெய்தோர்

கட்டு கயறிழுத்துக் கான்மிதிப்ப மேல்கீழாய்
நட்டு தறிபுரட்டு நாகமே—கெட்டியாய்த்

தேடும் பதக்தாற் றிருத்தியநூ லாராய்ந்து
பாடங் கொடுக்கும் பலகையே—தேடியே

தேசாதி தேசர்வந்து சேரக் கடைபுகட்டி
லாசார மென்றிருக்கு மையனே—மாசில்லாக்

கொத்திணங்கா யங்காடிக் குள்ளே யமைந்தமின்னார்
வத்திரத்துக் கொப்பான வத்திரமே—நித்தியமுந்

தொட்டகையால் வாரி யுடுத்தலாற் சூழ்ந்தநில
வட்டமெனப் பேர்படைத்த வட்டமே—யிட்டமுள்ளோர்

நாடி யுணேயெடுத்து நற்பூவும் போடுதலாற்
கோடிகமென் றேவிளங்குங் கோடிகமே—நீடு

மகிலதிசை யாங்கிறையம் பார்த்திடலா லம்புத்
துகிலெனிக ரான துகிலே—மிகவு

நெருங்குந் தலைக்கு நிறையவெண்ணெய் தேய்த்துப்
பெருங்கம்பி யிட்டசிறு பிள்ளாய்—மருங்கணைத்துப்

பூட்டிய பாவையுடன் புல்லும் வகைதெரியக்
காட்டிமஞ்ச லாற்றுவட காமுகனே—நாட்டிலே

செந்திருவன் னூரைத் திருப்பூட்டு முன்மருவு
மந்திரக் கூறையென்னு மாப்பிளேயே—சந்ததமு

நானிலத்தி லாடவர்க்கு நல்லார்க்கு மெல்லார்க்கு
மானிசத்தைக் காத்தசக்ர வர்த்தியே—நானறிவேன்

கொங்கை தடிக்குமுன்னே குல்லவல்ல வட்டமுமாய்
மங்கையர்மார் பைத்தடவு மச்சானே—தங்கும்

வடிவுடைய பெண்களிரு வாழைத் தொடையுங்
கடிதடமும் பார்த்த கணவா—முடிதாங்கி
நீட்டித் தழுவணையாய் நீகிடப்பப் பெண்கள்கையைப்
போட்டணைக்குங் கள்ளப் புருஷனே—கூட்டமிட்டுப்
பார்ப்பா ரெடுப்பார் பணங்கொடுப்பார் மார்பினொடுஞ்
சேர்ப்பார் கலந்துமொழி செப்புவார்—கூர்ப்பாய்ச்
சிலபேர்தா னாபதிக்கஞ் செப்புவார் பின்னு
நிலவாங்கா னாத்துகிலர் நிற்பார்—பலவிதமுஞ்
சொல்வா ருனைவளைந்து சுற்றுவா ரப்புறத்திற்
செல்வார் மறுத்துத் திரும்புவார்—நல்விதமாய்க்
கைப்படுத்த மட்டுமங்கே காத்திருப்பார் கையெடுப்பா
ரப்படிநூ றாயிரம்பே ரல்லவோ—விப்படியே
யங்காடிக் குள்ளே யரசிருக்கு முங்கள்கொலுச்
சிங்கார மென்னாலே செப்புவதோ—எங்கேனு
மாடைக்குப் பின்னுரைப்பா ராபரண மெல்லார்க்கும்
வேடிக்கைச் சிலையல்லால் வேறுண்டோ—நாடுங்காற்
சேலையுடுத் தாத சிறுவர் சிரசிலுறு
மாலைகட்டி னாற்பெரிய மாந்தரன்றோ—சேலையே
வேசையரை வைப்புவைக்க வேணுமென்று தானொருவ
னாசையினாற் பின்போ யலட்டினாற்—பேசுவார்
சோறும் பலசிலவுஞ் சொல்லவேண் டாமேநான்
கூறுமுன்னே நீர்தான் கொடுப்பீரே—பேறுபடக்
கச்சைகட்டுஞ் சேலையொன்று கச்சைமுறி யொன்றுநன்றாய்
வைச்சுடுத்துஞ் சேலையுடை மாற்றிரண்டு—நிச்சயமாய்த்
தந்துவரு வீரானாற் சம்மதிப்பே னென்பாரங்கே
வந்துறவு செய்வதுமுன் வல்லமையே—முந்துதிரு

வேடமிடுஞ் சைவருக்கு மேற்சாத்து முட்சாத்துந்
தேடுவதுந் தானே சிவபூசை—நாடினால
யாவையுமுன் மாயமன்றோ யிட்டதிரை வாங்கியன்றிச்
சேவை தனைக்கொடுக்குந் தெய்வமுண்டோ—வாவலுறு
முத்தமனே யுன்னை யொழிந்து திரிந்தவரைப்
பித்தனென்ப தல்லாற் பிறிதுண்டோ—வத்திரமாங்
சாவலனே யாழக் கடலிற் சிராயைநம்பிப்
போவதுமுன் பாய்கொடுத்த புண்ணியமே—பூவுலகிற்
கோவான மன்னர் கொலுமுகப்பி லேவிருது
பாவாடை போடுவதுன் பாராட்டே—பாவலுறு
மின்னா ரலங்கரிக்கும் வித்தார மத்தனையு
முன்னாலன் றோவொருவர்க் கொப்பனையோ—அந்நாளில்
மன்றல்கமழ் பூங்கோதை மாணிக்கத் தாள்கொடியி
லென்றகதை கேட்டு மிருப்போமே—நன்றுநன்று
கெட்டிகெட்டி யுன்மகிமை கேட்பதென்ன வேந்தருக்குத்
திட்டி விலக்குவதுன் சின்னமன்றோ—தொட்டிலாய்
மைந்தர்தமைத் தாங்கி வளர்ப்பாய் பெரியவரைச்
சந்ததமு மெத்தையென்றே தாங்குவா—யிந்தவகை
மிக்க சிலாத்தியாய் மென்மெழுகு சீலையிட்ட
கைக்குடையாய் வெள்ளைக் கவிகையாய்—மக்களையே
காற்று மழையுங் கதிரோனுந் தீண்டாமற்
போற்றி வளர்க்கவந்த புண்ணியனே—சாற்றுங்
குடைவீரர் தங்களுக்குக் கூடார மாகிப்
படைவீடுங் காத்த படையே—யிடையே
தனிப்பவரை வாட்டுதற்குத் தாவிவரு மாசிப்
பனிப்பகையைத் தீர்க்குமுயிர்ப் பாங்கா—தொனித்ததிரும்

வேலைப் புவிபுரந்த வேந்த ரெழுதிவிடு
மோலைக்குங் காவல்புரி யுள்ளாரோ—ஆலயத்தில்
வைக்கும் விளக்கு மாபாலே யுன்னாலே
யுட்க்குமனை தோறும்விளக் குண்டாமே—திக்கரசர்
வந்து கொலுமுகப்பில் மாலையிரு ணீக்குசுடர்
தந்து துணையிருக்குந் தந்திரியோ—சிந்தைமய
லெய்து மவர்மடன்மா வேற வுனைக்கிழியாய்க்
கைதனில்வைத் தாசை கடப்பாரே—மெய்தழுவி
வட்ட நிலம்புரக்கு மன்னவர்க்கெல் லாம்புனைந்த
பட்டமென்ப துங்கள்கொடிப் பட்டமே—கட்டிக்
கனக்குந் திரவியமுங் காசும்வந்து சேர்ந்தாற்
றனக்குள் ளடக்குஞ் சமர்த்தா—மனத்தாசை
விட்டு மனையை வெறுத்துத் துறவிகளுங்
கட்டுவது நீகொடுத்த காவியே—கெட்டி
யுறவுபரி யில்லறமு முன்னாலே மற்றத்
துறவறமு நீயே துகிலே—குறியாஞ்
செடிவன்ன மாளெழுத்துத் திருவைக்கத் தூரிக்
கொடிமுறிச்சுக் குத்திப்பட்டுக் கூடு—நெடிய
தலைப்பணியுங் கங்கா சலக்குப் பியும்வேப்
பிலைக்கருக்கு மல்லாம வின்னஞ்—சொலப்பொன்னாற்
சினிமுடிச் சன்ன குருக்குச் சிவப்பென்ப
ரான வகைக ளனேகமுண்டு—நானுகந்தே
கண்டையிட்ட பொற்சரிகைக் கம்பியிழைச் சல்லாவே
மண்டலத்தி லுன்பேர்க்கு மட்டுண்டோ—எண்டிசைக்குள்
கண்டாங்கி வர்க்கமெவர் கண்டுரைப்பா ருன்பெருமை
கொண்டாட வென்னாலே கூடுமோ—செண்டாடும்

வாசிநகுலன் விக்ர மார்க்கனுக்ர வீமனிந்தக்
காசினியெல் லாம்புரந்த கார்மேகம்—பேசுதமிழ்க்

கென்னருமை வெள்ளையரா சேந்த்ரனுலா வந்ததுவு
மன்னவனை நான்புகழ்ந்து வாழ்த்தியதும்—என்னருகே

வல்லிவந்து நின்றதுவும் மாலெனக்குத் தந்ததுவுஞ்
சொல்லிவரக் கேட்பாய் துகிலரசே—மெல்லவே

வள்ளிபக்கத் தேயவரும் வன்மையாற் சூலைத்திட்
டுள்ளகொடி சேர வுயர்த்தலாற்—றள்ளாமற்

கும்பமுனி யன்புறவே கூடலாற் றம்பியெனு
நம்பனுழை மந்திரத்தை நாடலா—லும்பர்கண்டு

பற்றியமை மேற்செயலாற் பார வெறியாட்டி
மற்றமற்றக் கொம்பர் வணங்குதலாற்—பொற்குடுமி

தாங்கவரு முச்சித் தலையாறு பெற்றதனால்
வேங்கையுருத் தாங்கிவந்த மேன்மையா—லாங்கே

யிளம்பருவத் தந்தநிலத் தெய்துதெய்வம் போல
வளம்பெறுமா ணிக்க மலையா—னுளம்பெருகத்

தேறுகடந் தோய்வதினாற் செவ்வோடை தாங்குதலால்
தாறுபடக் கால்நடக்குந் தன்மையால்—மீறியே

யப்பா கரைமேற்கொண் டங்குசமோட் டச்செலலால்
துப்பா கரையுளக்குந் தோற்றத்தான்—மெய்ப்பாங்

கிடக்கும்ப கம்பமதச் சிந்தூரத்தைப் போல
நடக்குங் கருப்பா நதியா—னெடுத்த

வரம்பைநள் காலசைத்திட் டாடுதலான் மாறா
வரம்படைத்த கோட்டு வளத்தாற்—றிரம்பெறவே

மெச்சு ரவிதறுகி மேவுதருச் சோலையா
லச்சமகல் வானவரை யாக்குதலா—னிச்சயமாய்க்

காதலைமேற் கொண்டதடங் கண்ணிறைந்த தால்வேள்வி
நாதனைநேர் கல்லகநன் னாட்டினு—னேதரிய
கல்விவரு வித்த காமைந்து காட்டுதலாற்
செல்வமிகு கோட்டையணி சேர்கையா—னல்விதமா
யாரு மறுகு மணிசிகர மும்பெறலாற்
சீருதவு மாவணத்தின் செவ்விபாற்—பாருலகோர்
விக்கினத்தைத் தீர்த்ததனுன் மிக்க கணபதியை
யொக்குமெனுஞ் சேண்பகநல் லூரினுன்—றக்கதென
வண்டு தரித்து மணம்பொருந்தி வாயிதழ்த்தேன்
கொண்டு துவண்டு குலாவியே—கண்டவுட
ஞதாவி ஞல்வி நம்பி யன்புசெய்து தன்புயந்தோய்
மாதரைப்போல் வேண்டளவ மாலையான்—வீதிவரும்
காலவட்டத் தாலே கனவட்ட மென்பதினு
மேலவட்ட மாக விசைத்தெழும்பி—மேலிட்ட
குப்பாய மிட்டுவரைக் கொப்பாய பூமிகுலுங்
கப்பாய வேலைக் கரைகடந்து—வெப்பூது
மூச்சோ டணையாமல் முன்சோ டணைமிதிக்கும்
வீச்சோ டனைவரையும் வீறடக்கி—யாச்சரிய
வெப்பரிக்குந் தேர்ப்பரிக்கும் வெம்பரியோ டொன்றியுல
கைப்பரிக்கும் வென்றிக் கடும்பரியா—னெப்பரிய
மத்தக நெற்றியில் வைத்து நிமிர்த்தகைச்
சத்த மழைத்தலை தட்டவு—மித்தல
வட்டகை யிட்டடி வைத்ததி லுட்குழி
பட்டிடி பட்டசை பட்டிட—வொட்டலர்
கொற்ற முடித்தலைக் குற்றி யுடைத்துடல்
பற்றி யிழுத்திடு பட்டிட—வுற்றிடு

சேவகர் மேலெதிர் சிறவு மேய்வ
ராமென வாய்விட வாயிர—மேவல
ரோடவு டெ..............................ம ரேபரி
யாடக மால்வரை யாமென—நீடிய
கந்தடவு கையாற் கடம்பொழிந்த காலாலே
கந்தடநின் றோங்குங் கடாக்களிற்று—னந்தாத்திற்
போயுந் தலைகாட்டு போர்க்கடன்மேற் கொண்டுதத்திப்
பாயு மனுமபதாகையா—னேயமெனச்
சொன்னதிரு மங்கைவிநதை சொன்மகள்கூத் தாடமுன்றின்
முன்னதிரு மூன்று முரசினான்—றென்மதுரைச்
சுந்தரனைப் போற்றுபரஞ் சோதிமுனி பாதமலர்
சிந்தனைவைத் தானை செலுத்துவோன்—வந்தனைசெய்
நன்னயஞ்சேர் தென்கரிஞ்சை நாயகனை யோகமிடுஞ்
சின்னணஞ்சா னென்றதுரைச் செம்புலியை—யின்னம்
துணையா மிருபெரிய சுவாமியுமென் றெண்ணி
யிணையாக நெஞ்சி லிருத்தித்—தணியாத
வாக்கு மனதுமொன்றாய் வஞ்சகமில் லாமலின்பந்
தேக்கு மனுகூல சிந்தையான்—தாக்குடனே
சீறிய மேவலர் சேனையு மானையு
மேறிய பாய்பரி யாவையும்—வேறாக
ளானது கோடிகை யாடின பேர்முடி
போனது கோடிகை போய்விழும்—யானைகள்
கோவென வேசா கோபிட மீரென(?)
ஆவென வாய்விடு வார்சிலர்—சேவகர்
மேலொடு காலற வீழ்கையி லேகுடன்
மாலைக ளாய்நரி வாய்தனி—னாலவும்

ஓடிய சோரியை யோரி யெலாமுண
வாடிய பாருக ளாலவு—நாடிய
பேய்கண பூசைசெய் பேறென வோடியும்
வாய்கொள மூளையை வாரவும்—ஆய்கழு
காடவும் டாகினி யார்கொள வேபலி
போடவு மீறிய போர்செய்து—நீடிய
போரரண மிட்டவொன்னார் பொன்முடியெ லாங்குவித்து
வீர ரணக்கொலுவில் வீற்றிருந்தோன்—பாருலகில்
செங்கதிரும் வெண்மதியும் தெற்குவடக் காய்வரினு
மங்கதிரும் வேலைதிட ராய்விடினு—மிங்கிதமாய்
வார்த்தை பழுதுரையான் வைத்தவா ரந்தவறான்
கூர்த்த கருணைகுடி கொண்டபிரான்—நீர்த்திரைசூழ்
பூவும் மலர்விரும்பு பொன்னும் கொளப்புயமும்
கோவு மிடங்கொடுத்த கோவேந்தன்—பாவலவர்
பாடியபா மாலைகொண்டு பல்லக்குந் தண்டிகையுங்
கோடி நிதியுங் கொடுத்தபிரான்—நீடிய
பூகண்ட லோகம் பொதுநீக்கித் தான்புரக்க
ஆகண்ட லன்போ லவதரித்தோன்—தாகமிகும்
பாவலவன் பின்னடந்தோன் பார்த்தனுக்குத் தேரூர்ந்த
மாவலவன் போனடத்தும் வல்லமையான்—மாவலிபால்
அன்று படியளந்தான் அப்புலவர்க் கிப்புலவர்க்
கென்று படியளப்பே னென்னவந்தோன்—நன்றியான்
பார்க்குண்டு நின்ற தன்மை பாராட்ட லாற்புலவ
ரார்க்கு மிடங்கொடுக்கு மாதரவாற்—றீர்க்கத்தால்
ஆயிரங் கோட்டையும்பெற் றுநிக்கஞ் செய்வதினால்
தூயவரை யெல்லாந் துணைகொள்ளலால்—நேயஞ்

சிவனடிக்கீ ழாய்வணங்குஞ் செவ்விபாற் றன்மேல்
துவளுமணி கலந்த சூழ்வா—லவிரோதைக்
காருவரை யேந்துதிரைக் காசினியைத் தாங்கவொரு
மேரு வரைபோல வீற்றிருந்தோன்—பாரரசர்

தந்தா வளமுந் தலமும் இலக்குமென்றே
தந்தா வளங்கொடுத்துச் சந்திக்க—விந்த

வயிரம்வைப்ப தேதெனவே மாற்றரசர் கப்பம
வயிரம்வைத்துக் கண்டு வணங்கப்—பயிலுமன்னர்

காணிக் கையர்சீட்டுக் கட்டளைசெ யென்றூரத்தக்
காணிக்கை யாவும்வைத்துக் கையெடுப்ப—நீணிலத்தில்

தாங்குதிரை யேறிவந்து சந்திக்க முச்சீனர்
தாங்கு திரைகொடுத்துத் தாள்பணிய—வாங்கே

குடமலை யாளமச்சை கொங்கணமுந் தம்பா
குடமலை யாது கொடுப்ப—வடகலிங்கர்

கொட்டிய செம்பொன் குவிதுவிப முன்முகப்பிற்
கொட்டிய பேரி குமுதமெனக்—கட்டியங்கள்

இந்தவகை யிந்தவகை யென்றுபர ராசர்திறை
தந்தவகை சொல்லுஞ் சமுகத்தான்—வந்த

மருத முதையும் வனச சரணன்
விருது புனையும் விசையன்—நிருபர்

சமர திமிர தபன வுதையன்
அமுத வசன னபையன்—நமது

கலிபு மகில காவு மிகலின்
வலிபு மடரும் வளவ—னிலமை

யுரக சி..................................
வரிய ..............................ணி — தரைசூழ்

திசைபுகழும் வீரப்ப தீரனைத்தன் சிந்தைக்
கிசையுஞ் சிறியதந்தை யென்போன்—புசபெலம்போல்
அங்கசவே ளென்னுமிரு ளப்பனுக்கு முத்திருள
துங்கனுக்குந் தம்பித் துணையானேன்—எங்கெங்கு
மன்னுதிக்குக் கீர்த்தி வளர்த்தருள பண்டாரம்
பின்னுதிக்க முன்னுதித்துப் பேரானோன்-கன்னனைப்போல்
தந்த துரைப்பெரிய சாமிக்கு நற்றுணையாஞ்
சுந்தரவேள் சின்னத் துரையென்றே—வந்தருளும்
வீரசக்ர பாணிமுத்து வீரப்ப ராசேந்திர
தீரனுக்கு மாமன் செயவீரன்—பாருலக
மெல்லாம் புரக்கவரு மெங்கள்காத் தப்பனையும்
வல்லாள னுஞ்சிவனு மன்னனையும்—நல்ல
புதல்வரெனக் கண்டுமனம் பூரித் திருக்கு
மதன கெறுவித வசிரன்—புதியநறுந்
தேமருவு முல்லையணி சின்னக்காத் தப்பனை புவ்
காமன் புழுகு கறுப்பனையு—மாமெனவே
சொல்லிய தம்பித் துணையென் றுளமகிழ்வோன்
அல்லிமலர்ப் பூங்கோதைக் கன்பானோன்—வல்லமைசேர்
சூரியன்பா லன்முத்து வீரப்பன் சொற்புதல்வன்
சூரிய வேள்பெரிய சுவாமிமுன்னோன்—வாரமுள்ள
முத்து வீரப்ப முகுந்தனுயி ருக்குயிராய்
மெய்த்துணை யென்று விரும்புவோன்—மொய்த்த
அடை............................டையாத வாசல்
உடையான் வரிசை யுடையான்—உடையான்
வரத்தி லுதித்த மகப்பேறு செம்பொன்
கரத்தா லுதவுகொடைக் கன்ன—னாத்தாற்

பருக்கின்ற செங்கணிலப் பாவையைத்தோண் மேல்வைத்
திருக்கின்ற வெள்ளையரா சேந்திர—னொருக்கி
யசைக்கின்ற கானகத்தி லாவிரங்கக் கான
மிசைக்கின்ற வெள்ளையரா சேந்திரன்—அசைக்குங்
கணையென்ற கண்ணியர்க்குக் காதல்தராக் காம
வீணையென்ற வெள்ளையரா சேந்திரன்—அணிபால்
இலங்கிய சாதிரத்நச் சோதிமணிப் பூணை
விலங்கிய வெள்ளையரா சேந்திரன்—பெலம்பொருந்தும்
வீமன் தரசூரன் வெள்ளையரா சேந்திரனிறை
தாமரை மாது தனந்தழுவிக்—காமர்
வளமலியும் பூலோக மண்டலமெ லாங்கொண்
டுளமகிழு நாளி லொருநாள்—கிளரு
மணிமறுகி லெங்கோன் வரும்பவனி யென்றே
குணில்பொரு பேரி குமுறத்—தணியாத
மாதரு மாடவரும் வாசமலர் வாவியிற்போய்ச்
சீதள நீராடுஞ் செவ்விக்கண்—ஓதியங்கள்
பங்கயப் போதைப் பருகுவது பார்த்தொருத்தி
கொங்கைவடு வென்றொருவன் கூறினா—னங்கொருத்தி
கண்ணாரி........................சனமும் பார்ப்பாளென்
றெண்ணாமை ஆடியப்பா லெய்தினாள்—பெண்ணாரைப்
பார்த்தா னவரையவள் பாதமென்று கண்களின்மேற்
சேர்த்தா னகைத்தூடல் தீர்கின்றா—னார்த்துடுத்த
தன்கலையை மென்புனலில் தப்பிவிட்டு நீர்த்திரையை
மென்கலையென் றேயிழுத்தாள் வேறொருத்தி—நன்குநன்கு
தட்டு நிதம்பத்தேர் தண்ணீரி லோடுதென்று
கட்டுரைசெய் தேயொருத்தி கைபுடைத்தாள்-விட்டுவிட்டுக்

கையால் மறைக்கின்றாள் கைக்குள்ளே பாம்பென்றாள்
மெய்ப்பாமென் றோடி வெளியில்வந்தாள்—மையார்
குழலை விரித்துடலைக கூட மறைத்தாள்
அழகு கருமுகில்போ லானாள்—விழிபரப்பி
மற்ற மடவார் மயில்போலச் சுற்றினா
லுற்றவகை பின்ன மொருக்காலே—பொற்றொடியார்
பூந்துகிலும் பட்டிகையும் பொன்னரைநா ணுந்தரிப்பா
ரேந்துமுலைத் தொய்யி லெழுதுவார்—சாந்துங்
கலவையுஞ் சேர்ப்பார் கனகவளை பூண்பார்
பலபணியுஞ் சேர்ந்தழகு பார்ப்பார்—இலகிய
சோதி மணிவிளக்காய்த் தோன்றி மணிமாட
வீதி தனிற்புகுந்தார் மின்னனையார்—ஓதும்
அவனிபுகழ் வெள்ளையந ராதிபதி யாங்கே
பவனிபுலா வென்று பணித்து—நவமான
தங்கக் குடத்திற் றனிமஞ் சனநீரில்
திங்கட் பனிநீர் தெளித்தாற்றிக்—குங்குமப்பூக்
கூடக் கலந்து குளித்துத் துகில்வனைந்து
மாடத் தனிமுகப்பில் வந்திருந்து—நாடித்
தரித்ததிரி புண்டரமுஞ் சாத்தித் திலகந்
திருத்தியகத் தூரியுமேற் றீட்டிப்—பெருத்த
குருமணி வச்சிரமுங் கோமே தகமும்
வருபதும ராக மணியு—மருவி
யிசையு மிருகாதி லிட்ட கடுக்க
னசையும் வெயில்நிலவுண் டாக்கத்—திசைவிளக்கு
முத்துச் சரமு முழுவயிரக் கண்டிகையும்
கொத்துச் சரப்பணியுங் கோத்தணிந்து—சித்திரமாய்ச்

செய்யு மணிவளையுஞ் செய்சாமு மேபுனையுங்
கையும் விரலிலிட்ட கற்கட்டுந்—துய்ய
கணையாழி வச்சிரத்தின் காந்தியுஞ்செவ் வேளுக்
கிணையா மிலங்கு மெழிலுந்—தணியா
தொருதகட்டுப் பாகுகட்டு முன்னிதமு மேலே
சொருகிய முத்துத் துராயுஞ்—சரிகையிட்ட
பொன்புடவைக் கட்டுப் பொதிந்த வுடைவாளுந்
தன்புயமேல் வல்லவட்டச் சாலுவையு—மன்பர்
அலங்கரித்த சென்னியுஞ்சங் காழிதரித் தான்போ
லிலங்கமணி மேடையின்மே லெய்தக்—கலங்காத
திரக் கரடமதஞ் சிந்துங் கடுங்கோப
வீரப் பிறைக்கோட்டு வேழமொன்றைப்—பாரப்
பொருப்பைக் கொணர்ந்துவரல் போல்யானைப் பாகர்
விருப்பத் துடன்கொணர்ந்து விட்டார்-செருக்குமத
யானைப் பிடர்மே லரசர்பிரான் வீற்றிருந்தான்
சேனைத் தலைவரெல்லாஞ் சேவித்தார்—மீனக்
கொடியு மனுமக் கொடியு மிடாலு
நெடிய கொடியு நெருங்க—மடமடெனப்
பேரி முழங்கப் பெரியவீ ராணமும
லாரி தவில்முழவு மார்த்தொலிப்பப்—பூரிகையுஞ்
சங்கமுங் கொம்புமணித் தாரையுமுள் ளேதொனிக்க
அங்கவங்க ரெல்லா மடிவருட—எங்கெங்கும்
கைக்குழலுங் கேடகமுங் கத்தியும் வாசிலை
வைக்கு மருவிகட்டி வல்லயமு—மொக்கும்
வயவர் பிடித்து மருங்கு நெருங்கப்
புயபலம்போற் சுற்றம் பொதியச்—செயவேள்

புதுவைவா சப்பனருள் புத்திரன்பைந் தாம
மதுமலர்ப் பூங்குவளை மார்ப—னிருபதியாங்

கற்பகபூ பாலனென்ற கார்யப்ர தானியொரு
நற்பரி யேறி நடாத்திவரப்—பொற்புடனே

வென்றி வயப்புலி மேற்சே வகப்பெருமா
னென்றகா ணிக்கனும்வந் தெய்தவே—நன்றுடனே

ஒண்டொடியுந் தன்வரிசை யூழியமுஞ் சூழ்ந்துவரக்
கொண்டபுகழ் கட்டியங்கள் கூறவே—மண்டலிகர்

பல்லக்குந் தண்டிகையும் பாய்பரியும் பின்னுமுன்னுஞ்
செலலக் கடன்முழக்கஞ் செய்வதுபோ—லொல்லென்

றிரையுங் குழாநடுவி லெய்தினா னெங்கள்
துரை வெள்ளையதான சோமன்—விரைவினொடு

மன்னன் வரும்பவனிக் காசையுற்றுக் காணவரு
மின்னார் வணங்கினார் வெய்துயிர்த்தார்—பொன்னாரு

மாலை யெமக்குமுல்லை மாலையரு ளாமலெங்கள்
மேலே மதனை விடுவாயோ—மேலான

மந்தக்கா லேறியிங்கே வந்தால் மனைக்கேக
இந்தக்கா லேறுமோ வெங்களுக்குக்—கந்திடறு

காரானை வீதி கடந்ததென் றாற் கள்ளமதப்
போரானை யாங்கள்வெல்லப் போருமோ—நேராய்

விடவன் றிலைமதனை வெல்லவிட நீதிக்
கடவன் றிலைமறைவு காயா—துடர்போமே

கோகிலங் கோடிவந்து கூவியெம்மை வாட்டவிட்டுப்
போகிலங் கோடிவந்து புக்கோமோ—மாகத்தில்

அச்சேலை மார னடையாளங் கட்டுமுன்னே
இச்சேலை யாங்களைவ தென்னையோ—அச்சமுற

வெங்கா மனையுமவன் வில்லையுங் கண் டால்மனையிற்
றங்கா மனையுந் தாமாவோ—இங்கே

குடக்குதிக்குந் திங்கட் குடைவிரித்தா லெம்மை
யடக்குதிக்கும் பெண்படைக்கு மாற்றோந்—திடக்காமன்

வாம்பரியுந் தேருமாய் வந்தா லமளியின்மேற்
காம்பரியும் பூவுமென்னைக் காய்ந்திடுமே—பூம்பகழி

வீறு மடல்புரிந்தால் வேண்டுகிழி கைப்பிடித்து
மாறு மடலேற மாட்டோமோ—தேறுதலை

சொல்வாய்நின் மாலைதரச் சொல்வாய் மதவேளை
வெல்வா யெனமொழிந்து வெவ்வேறே—பல்விதமாய்

மாதர் புலம்புகையில் மற்றொருத்தி யங்கவர்போற்
காத லுறாத கருத்தினாள்—ஓதியே

வாசிக்கும் வீணைகொண்டு மாதரவர் மாரனுக்குத்
தூசிப் படைபோலத் தோன்றினாள்—நேசிக்குங்

கும்பமுலை யானைக் குறித்துநின்று பார்க்கையிலே
அம்பனைய கண்ணா ளமர்புரிந்தாள்—செம்பதுமத்

தாளுக்குள் ளேயணியுந் தண்டையொலி கேட்குமுன்னே
வேளுக்குச் சீட்டனுப்பி விட்டாளே—நாளுமே

மெல்லிடையின் மேலிறுக்கி விட்டமுந்தி வீச்சாலே
வல்லிடையன் சாய்த்த மரமானேன்—நல்ல

செழுநாண் மலர்க்கோதை சேர்க்குமரை நாணால்
முழுநா ணிழக்க முறையோ—யழகுபெறு

மவ்வனிதை கைவிரலில் ஆழிவட்டங் கண்டவுட
னிவ்வணமே சுற்றிவட்ட மிட்டேனே—கைவீச்சில்

முன்கைக்கு ளிட்டவளை மோதித் தொனிக்கையிலே
யென்கைக்கு ளில்லையே யென்னாவி—பொன்குலவு

கஞ்சமுகை போலுமுலைக் கச்சு நெகிழ்கையிலென்
னெஞ்சமுங் கூட நெகிழுதே—கொஞ்சமோ
கண்ட சரமுங் கழுத்தையும்பார்த் தான்மதன்கைக்
கொண்டசர மெய்யிற் குளியாதோ—ஒண்டொடிதான்
சாடையிலே பேசித் தருகையிலே பொற்குழைக
ளாடையிலே வேளுடன்மல் லாடினேன்—வாடினேன்
புன்னகையைக் கண்டாற் பொறுக்குமோ சொல்லினி
யென்னகைகா ணும்பதறி யேங்கினேன்—மின்னனையாள்
மைக்கணையு மென்புருவ வார்சிலையும் பார்த்துமதன்
கைக்கணையு நாணுமாய்க் கைகலந்தோ—மெய்க்கவே
யிரமதி பொப்பா மிலங்குமுகம் பார்க்கையிலே
பார மதியும் பறிகொடுத்தேன்—காரளக
மொய்த்தகறுப் பாலே முழுதுஞ் சிலைமாரன்
வைத்தகறுப் பாலே மயங்கினேன்—சித்தந்
திரும்புமோ யெப்படியோ தெய்வமே யென்றேன்
கரும்பு மதனும்வரக் கண்டேன்—விரும்பியவென்
னேர்மை யறிந்துநெடு நீலியென்னைப் பார்க்கையிலே
கூர்மைவிழி யாலே குறிப்பறிந்தே—னேர்மனதே
யானு மென்னசெய்தி யாருற்றுக் கூட்டிவைப்பார்
மானுள மனையறிய மாட்டோமோ—போனல்
வருவதெல்லாங் காணவென்றே மாதரசி பின்போய்த்
தெருவழியே சுற்றித் திரிந்தேன்—ஒருமடந்தை
யென்பா லடுத்துநின்று ளிந்தமின்னு ளாரென்றேன்
அன்பா லவளுரைத்தா ளத்தனையுங்—கொன்பாயும்
வேலா லமர்கடந்த வெள்ளையரா சேந்திரனை
மேலான சங்க்ராம விக்ரமனை—மாலாக

நேசிக்கும் பொன்மா னிறைந்தகொலு முன்வீணை
வாசிக்குஞ் சங்கீத வல்லியிவள்—பூசிக்குங்
காமகுரு பீடமகா காமனுக்கு நிட்சேப
மாமதன நூல்பயிலும் வாத்தியார்—காமுகரைத்
திண்டாட்டங் கொள்ள தெய்வமிவ ளென்றுமெத்தக்
கொண்டாட்ட மாயெனக்குக் கூறினள்—உண்டான
காரியமே..........................கன்னியே நீயுரைத்த
நாரிபொது வோவொருவர் நாட்டமோ—சீரறிந்து
சொல்லுவா யென்றுரைத்தேன் றோகைபொது வானாலு
மெல்ல வசப்படுத்த வேணுமென்றாள்—நல்லதென்று
மாற்றமொழி சொல்லுமுன்னே மால்யானை மன்னவனுந்
தோற்றுகுடாம் வந்தடுத்த தோகையரும்—போற்றும்
வரிசைப் பவனி வழங்குமுலாப் போந்து
புரிசைமணி வாசல் புகுந்தார்—உருவிலிதன்
கையைங் கணைமலருங் கன்னற் சிலைமேல்வைத்
தெய்யும் படிவந் தெதிர்ப்பட்டா—ளையையோ
மெய்க்கட்டு மாங்கனியை வேணு மெனவிரும்பிக்
கைக்கெட்டி வாய்க்கெட்டாக் காலமோ—வைக்கும்
பனையேறிப் பாளைதொடாப் பாவியேன் செய்த
வினையே வலியதென்ன வேணு—மனதுளைந்து
சிங்கார மானமலைத் தேனுக்குத் தான்முடவன்
அங்காந் திருந்தகதை யாய்ப்போமே—இங்கெனைத்தான்
இவ்வளவு செய்ததெய்வ மின்னமென்ன செய்யுமோ
அவ்வளவு வாச லறியோமோ—கவ்வையுனக்
கேதென்று கேட்பவரு மில்லையே தொல்லைமயல்
தீதென்று நீங்கத் திடமில்லையே—ஆயதினல்

ஆனதெல்லா மாகுமென்றே பங்கசனு மாசையுமென்
மானமு நாணுமாய் மல்லாடித்—தான்றொடர்ந்து
மாமறுகி னூடே வரும்போது காளியென்னும்
யாமளையின் கோயி லிருந்தங்கே—காமவிடாய்
கொண்ட....................கோயில் மணிமுகப்பு
மண்டபத்துக் குள்ளே மடக்கினேன்—சண்டமதன்
தென்றற்றே ரேறியொரு செங்கரும்பு நாண்பூட்டி
மன்றற் கணைகை வசமாக்கி-யன்றிலொடும்
எக்காள மூதவிடுத் தேங்குதுயி லூதுசின்னம்
அககாவி லேறி யடந்தேறி—மிக்கா
மதியைக் குடைவிரித்து வந்துதலைப் பட்டான்
கெதியற்ற பாவி கிடந்தேன்—விதியினாற்
றன்னை யறியாமற் சற்றே மயக்கமா [பேறு
யென்னை யயர்த்துவிட்ட தென்னசொல்வேன்-சன்னதிப்
அம்மன் கொடுத்ததுபோ லந்தகன்கண் பெற்றதுபோல்
இம்மனது மம்மனது மேகமாய்ச்—சம்மதித்துப்
பெண்ணரசி வந்தாளப் பெண்ணரசிக் கொப்புரைக்கில்
விண்ணரசி யல்லாமல் வேறுண்டோ—பெண்ணெழிலாள்
முந்திரதி யானதொரு மோகவல்லி யாளயர்ந்த
மந்திரதி யானமதில் வந்துநின்றாள்—செந்திருவு
மாலையுந் தாங்கி வளர்பிறையும் பெற்றதினால்
வேலையென்று சொல்ல விதியுண்டோ—வேலையென்றால்
மீனாறு முப்பு விளையுமுவர் நாற்றமுண்டா
மானா லுவமையிட லாகாதே—தேனோடு
வண்டு படிய மலர்ச்சோலை யாம்பலர்கை
கொண்டு பிடித்திழுக்கக் கூடுமோ—விண்டுரைக்கிற்

செம்பதுமைக் கையாலே வாரியெடுக் குந்திறத்,நாற்
கும்பனைநே ராஞ்சொருத கொண்டையாள்-அம்பிணையாய்

மிஞ்ச வரிபோட வெம்மைகொள லாற்கடல்வாய்
நஞ்ச மெனவே நவிலலாம்—நஞ்சமெனிற்

சங்கரனர் கண்டந் தனக்கு ளடங்குமென்று
லங்கதனை யொப்புரைக்க லாகாதே—பொங்கமாய்

வைக்குங் கடைகூர்மை வாய்த்ததினல் வேலென்பேன்
கைக்கு ளடங்குமென்று கட்டுரையேன்—ஒக்குமெனில்

மெய்த்தவரா கத்துருவ மேவிப்பார் வைத்திடங்கொண்
டொத்தலா லாங்குவளை யொத்திசைய—வைத்திடலா

லெண்ணரி கிட்ணவடி வெய்துதலாற் பூங்கமலக்
கண்ணனைநே ரானகருங் கண்ணினள்—வண்ணமிகு

மொப்புக் குழைசே ரொளிமதியென் றேயிலங்கக்
கொப்புக் குழைசேர் குளிர்முகத்தாள்—செப்பு

மிதங்கொண்டு கச்சை யிறுக்கி மிருக
மதங்கொண்ட காய்களிறாய் வைப்பேன்-மதங்கொண்டாற்

பாக னிடத்துப் பயமுறுத்திக் குத்துதலால்
தாக முடனுவமை சாற்றேமே—வாகாய்

எழுமறைக்கு மேலோங்கு மென்றுரைக்கு தென்பேன்
விழுவதினு லேயுவமை விள்ளேன்—பழுதில்லாத்

தேமாலைக் கொண்டெதிர்க்குஞ் செவ்வியாற் பொன்னிருந்து
காமா...........றல்ஞ்சேர் காட்சிபால்—யாமறியச்

செஞ்சந் தனங்குழைத்துச் சேறணிந்த தால்மலருங்
கஞ்சந் தனைப்போற் கனதனத்தாள்—வஞ்சிமுலைக்

குன்று சுமந்தவஞ்சிக் கொம்போ தடித்துருவோ
என்று துவளு மிடையினள்—மன்றல்கமழ்

வாழை யணைத்து வனைதுகிலுஞ் சுற்றிமுன்னே
தாழு மணிவடமுஞ் சாற்றுதலா—லாழிவட்டச்
சேமத்தேர் வேணுமென்று தென்றற்றே ராளிவைத்த
காமத்தேர் போலுங் கடிதடத்தாள்—தாமரைமேல்
ஓதிமம்போல் மெல்ல வுலாவினு ளென்னையறி
யாதிமம்போல் வந்துதளி ராட்டிடுமே—மாதரசே
யாமோ கனவிருள வாயாசை போவதென்று
மாமோ கனையறிய வந்திரோ—காமனெய்பு
மெண்ணமுலை மேல்மெழுகா யான்மெலிவே னென்றிரங்கி
வண்ணமுலை மேலணைக்க வந்திரோ—பெண்ணமுதே
கைச்சரசம் வாய்ச்சரசங் காட்டியித ழூறலுக்குள்
வைச்ச ரசங்கொடுக்க வந்திரோ—நிச்சயமாய்ச்
சேரனுக்கு மாலைதந்து தேடியெனை யாளாக்கி
மாரனுக்குப் போர்விலக்க வந்திரோ—ஈரமில்லா
நெஞ்சமோ சற்று நெகிழாதோ வென்னுசை
கொஞ்சமோ வாய்திறந்தாற் குற்றமுண்டோ-தஞ்சமென்றெ
ஞசையினுற் கையெடுத்தேன் அங்கைகொட்டி மூக்கில்வை
மோசையினு லல்லோ வுயிர்பிழைத்தேன்-பேசியினி [க்கு
யென்னகையைக் கொண்டிழுத்தே னென்மடியில் வீழ்ந்தகள்ளி
புன்னகையைக் கொண்டும்மைப் பூரித்தேன்—வன்னமலர்
மெத்தையிற்ற னித்திருத்தி வெற்றிலைச்சு ருட்கொடுத்து
முத்தமிட்ட ணைத்தணைத்து முற்கிடத்தி—யுத்தரத்தில்
வக்கணைத்தொ ழிற்படுத்தி வைத்தபற்ப டச்சிறுக்கி
சிக்கெனச்சி னத்தடித்த சித்திரிப்பு—மெக்களிப்பு
மென்சொல வென்றுகி லெங்கு முரிந்தனள்
தன்சரசங் கொடு தன்றுகில்—பின்செல

வந்து குறங்கினில் மண்டல மென்றவள்
குந்தி யிருந்தொயில் கொண்டசை—புந்தொறு

வண்டு பறந்தது மன்றல் கமழ்ந்தது
கொண்டை நெகிழ்ந்து குலைந்தது—மண்டிய

தண்டை சிலம்பு சதங்கை யிரைந்தது
கெண்டை புரண்டது கெஞ்சிய—தொண்டையி

லோசைதர விருடலு மோருடல மாய்மருவி
யாசைநிறை வேறுமனத் தாவலுடன்—நேசம்வர

இன்ப ரசமருந்தி யேகபோ கக்கலவி
யன்புதர நான்கண் ணயர்ந்துவிட்டேன்—என்புகல்வேன்

காதல்கொண்ட பாவி கனவைநன வாகவெண்ணிப்
பாதகிமார் பைத்தடவிப் பார்த்தேனே—யேதுசொல்வேன்

வட்ட முலையு மணிவடமு மென்கரத்திற்
றட்டவுங்கா ணேன்மனது தட்டழிந்தேன்-பொட்டெனவுங்

கண்ணை விழித்தேனவனைக் காணேன் கனவில்வந்த
பெண்ணை நினைத்துமனம் பேதலித்தேன்—பெண்ணரசி

மஞ்சள் துவண்ட மணமெங்கே யென்மார்பில்
செஞ்சாணம் பட்ட சிவப்பெங்கே—வஞ்சி

பருகு மிதழிற் பதித்தகுறி யெங்கே
இருதுடையில் வைத்தநக மெங்கே—பெரிய

தனக்குவட்டி லெழுது சந்தனப்பூச் செங்கே
யெனக்கு முடித்தமல ரெங்கே—நினைக்கிலொன் றன்

காணே னடிச்சுவடுங் காணே னறியாமல்
வீணே பதறி விழித்தேனே—நாணினேன்

கள்ளி சுகத்தைக் கனவென்று நானறிந்தால்
வெள்ளி முளைத்தும் விழிப்பேனோ—வுள்ளபடி

யென்றவிழித் தேனவளை யெவ்விடத்துங் காணா
னின்றவிழித் தேன்றிகைத்தே னெட்டுயிர்த்தேன்—அன்றியே
யென்னாலே யாவதொன்று மில்லையென்று மெய்சோர்ந்தேன்
உன்னாலே யாமென் றுளந்தெளிந்தேன்—முன்னாக
வாதுகிலே சந்துரைக்க மாட்டாயேல் வேள்பொருத
வாதுகிலே சந்துடைக்க மாட்டேனே—பேறுசெய்வே
னேரிழையைக் கூட்டி நெருக்கிநெய்த வத்திரமே
நேரிழையைக் கூட்டிவைக்க நீயாமே—வாரிசமாம்
பூமானைக் காத்த புணர்முலைமேற் சேர்ப்பாயே
பூமானங் காத்த புடவையே—மாயனைக்க
ணம்பரமே யென்கவலை யாய்விசி னாயர்ந்தேன்
அம்பரமே யென்கவலை யாற்றாயோ—செம்பொனிறம்
வாய்த்துடுக்கச் சீராய்நீ தூதுசென்றால் மாதர்சொல்லும்
வாய்த்துடுக்குஞ் சீராய் வழங்குமே—தோய்த்தபைம்பொற்
கண்டையே சேருமிழைக் காழகமே யென்விரகங்
கண்டையே சேரும்வகை காட்டாயே—வெண்டுகிலே
வூடும்பா வுங்கலக்கு மோர்கலையே வேள்கணைமார்
பூடும்பா வுங்கலக்கு மோர்கலையே—தேடியே
யம்பஞ்சி னாலிழைத்துண் டாக்குதுகி லேசிலைவேள்
அம்பஞ்சி னாலிளைத்தே னையையோ—நம்பு
மலைச்சுமட்டி லேறிவரும் வத்திரமே வேளால்
மலைச்சுமட்டி லாமயக்க மானேன்—நிலைப்பான
வாணிகலா பப்புரிய வந்தாயென் மீதுபஞ்ச
பாணிகலா பப்புரியப் பார்ப்பாயோ—நீணிலத்தோர்
சொல்லிய கிட்டனன் துரோபதைமா னங்காத்த
வல்லமையு நீகொடுத்த வல்லமையே—நல்ல

மயிலுக்குப் போர்வை வழங்கினவன் என்றும்
பயிலப் படுவதுமுன் பண்பே—மயல்கொடு
நீலிகள்பொன் போல்முலையை நீள்ரவிக்கை யால்மறைத்து
வாலிபரைக் கோட்டிகொள்ளும் வஞ்சகமுஞ்—சாலமாய்
மூக்காட்டுக் குள்ளே முகங்காட்டி யாடவரைக்
கொக்காட்டல் கொள்ளவருங் கூத்தாட்டு—மிக்காய்
மதன கெறுவிதமு மாதருக்குச் சீலை
யுதவியிலுக் கில்லாம லுண்டோ—இதமறிந்து
கூறாயென் மோகமெல்லாங் கூறாய்நீ தூதுசென்றால்
வேறாய் நினைப்பாரோ மின்னனையார்—தேற்றினேன்
மாதுக்கு நீயே மனதுக் குவந்தாலென்
தூதுக்கு நீயே துணையாமே—ஓதியக்காற்
பாசமே தந்தினாற் பாசமே யுண்டுனக்கு
வாசமே நீயுய்விசு வாசமே—நேசமுள்ள
உத்தமனே பஞ்சிவெட்டி யுண்டாக்க வந்தாயே
மெத்தவுநான் பஞ்சிவெட்ட வேண்டாமே—துத்தியமோ
ஐயாநீ முன்போ யடுத்தா லவள்வளைத்துக்
கையா லெடுத்தணைத்துக் கட்டுவாள்—மெய்யா
வுனைக்கட்டிக் கொண்டவுட னுன்பொருட்டால் வல்லி
யெனைக்கட்டிக் கொள்ளமனத் தெண்ணித்—தினைப்பொழுதிற்
கூட்டிவரச் சொல்லிக் கொடுங்கையினாற் சேர்த்ததர
மூட்டியின்ப மத்தனையு மூட்டுவாள்—நாட்டிற்
கனங்கொடுக்கும் பூந்துகிலே காமரதிக் கென்மேல்
மனங்கொடுக்கத் தூதுரைத்து வா.

---

மிக்க புகழுடையான் வெள்ளையா சேர்த்தனவன்
மக்கள்மரு மக்களுடன் வாழியவே—திக்கறியச்
சந்ததமுங் கீர்த்தி தழைத்தசெல்வ முந்தழைக்கச்
செந்தமிழும் வாழி தினம்.